[20th January 1961

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (இ) During the Third Five-Year Plan, the Government propose to establish worksheds in places with a population up to five thousand and Industrial Estates in places with a population above that limit. During 1961–62, it is proposed to start an Industrial Estate at Arkonam in the North Arcot district.

*Arkonam-Erode railway line*

* 34 Q.—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அரக்கோணத்திலிருந்து ஈரோடு வரைக்கும் ரயில்வே இரட்டைப் பாதைகள் அமைக்கப்படும் திட்டத்தை சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரியப்படுத்தியிருக்கிறார்களா ?

(இ) அப்படியானால், எடுக்கப்பட்டுவரும் நடவடிக்கைகளின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) The State Government have not sent any proposal for the doubling of the railway track. The Railway Administration has taken up under the Second Five-Year Plan, the doubling of certain sections between Arkonam and Erode aggregating to 89 miles. Out of the 89 miles a length of 35·17 miles has been doubled and opened for traffic. 26·50 miles of doubling work is still in progress and the proposal is still under review of the Railway Administration in respect of the remaining 27 miles.

SRI P. G. MANICKAM : ஸார், இதுவரை பூர்த்தி செய்யாத 25 மைல்களையும் இன்னும் எவ்வளவு காலத்திற்குள் பூர்த்தி செய்து கொடுப்பதாக ரயில்வே இலாகா உத்தேசித்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கான வேலை நடந்து கொண்டுதான் இருக்கிறது. சீக்கிரத்தில் பூர்த்தியாகி விடும்.

SRI P. G. MANICKAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்காக ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ? இதில் எவ்வளவு செலவு செய்யப்பட்டதாக கணக்கு எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தொகை விவரம் என்னிடமில்லை. மைல் விவரம்தான் என்னிடமிருக்கிறது.

*National Cadet Corps*

* 35 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government of India have recommended to the Government to stop recruitment to National Cadet Corps?

20th January 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI A. A. RASHEED : Sir, may I know whether there is any proposal to make it compulsory for the students to join National Cadet Corps?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no such proposal under consideration now.

*Harijan colonies*

*** 36 *Q.*—SRI A. VEDARATHNAM :** கனம் பொது மாராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சுத்தமான ஹரிஜனக் காலனிகளுக்குப் பரிசு வழங்கும் திட்டம் பற்றிய விவரமென்ன ?

(இ) இச்செய்தி சேரிவாழ் மக்களுக்கு எட்ட என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : (அ) The neat and sanitarily well-maintained Harijan colony in each taluk is eligible for the award of prizes. The award of prize to the best Harijan colony will be in the shape of five Ambar Charkas or a Radio Set and will not cost more than Rs. 300 per taluk.

The selection of colonies will be made by the District Harijan Welfare Committee or any other District Level Committee acting on its behalf with due regard to the following aspects, viz :—

(i) keeping of houses clean,

(ii) keeping of surroundings clean,

(iii) keeping of streets, bathrooms, wells, latrines, schools, etc., clean, and

(iv) keeping the boys and girls clean.

( இ ) A press release was issued on 5th August 1960 which had appeared in the Tamil Dailies like Swadesamitran, Dinamani and Nava India. Besides this, the Collectors and the Director of Harijan Welfare have also been requested to give publicity to this scheme.

**SRI A. VEDARATHNAM :** ஸார், சேரி வாழ் மக்களுக்கு பத்திரிகை படிப்பதற்கு வசதிகள் மிக குறைவாக இருப்பதினாலும் இதைப்படிக்கின்றவர்கள் குறைவாக இருப்பதினாலும் அங்கு அவர்களுக்கு பிரச்சாரம் மூலமாகவோ அல்லது துண்டுப் பிரசுரங்கள் மூலமாகவோ இந்தப் பரிசு திட்டத்தைப்பற்றி அறிவிக்க சர்க்கார் முன்வருமா ? இந்தத் திட்டம் ஆரம்பித்தபின்னால் எந்தெந்த சேரிகளுக்கு இந்தப் பரிசு கொடுக்கப்பட்டிருக்கிறது ?

**THE HON. SRI P. KAKKAN :** இதைப்பற்றி கிராமங்களில், சேரிகளில் நன்றாகப் பிரச்சாரம் செய்யப்பட வேண்டும் என்று அந்தந்த ஜில்லா கலக்டர்களுக்கு சொல்லப்பட்டிருக்கிறது. அவர்களும் அவ்விதமே செய்வார்கள் என்று நம்புகிறேன்.